# மனிதன் மனிதனை வணங்குதல்

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்.

## மனிதன் தெய்வமாகலாமா?

இன்றய உலக நிலமைகளை நாம் உற்றுப் பார்க்குமிடத்து, நாளுக்கு நாள் மனிதன் தன்னை உருவாக்கிப் படைத்த தேவாதி தேவனை விட்டு விலகி, அவருக்குப் பாத்திரராய் வாழவேண்டிய வாழ்க்கையிலிருந்து தூரமாகி, அவருக்குக் கொடுக்க வேண்டிய துதி கன மகிமையை மனுஷர்களுக்குக் கொடுத்து, மனிதனை மனிதன் வணங்குகிறதை நாம் எங்கும் காணக்கூடியதாய் இருக்கிறது. இன்றய முன்நேற்றமான விஞ்ஞான உலகில், கல்வியிலும் அறிவிலும் மேதைகளாக விளங்குபவர்களும் இப்படியான மூட வழிபாடுகளில் நம்பிக்கை வைத்து வாழ்வதும், மனிதனை மனிதன் வணங்குவதும் எவ்வளவு தவறானதும் கவலைக்குரியதுமாய் இருக்கிறது. மேலும், கடவுளுடைய ஏனய படைப்புக்களையும், மனித சிந்தனையால் உருவாக்கப்பட்ட விக்கிரகங்களையும் மனிதன் வணங்கி வருகிறான். இந்த மனிதனை மனிதன் வணங்கும் நிலை, கடவுள் உலகத்தைப்படைத்த ஆரம்பத்திலேயே சத்துருவான பிசாசினால் ஏதேன் தோட்டத்திலேயே வித்திடப்பட்ட சம்பவத்தை பரிசுத்த வேதாகமத்தில் ''ஆதியாகம்'' அதிகாரங்களில் பார்க்கலாம்.

## தேவனைப்போல இருக்க விரும்பினர்

கடவுள் படைத்த முதல் மனுஷன் மனுஷி ஆகிய ஆதாமையும் ஏவாளையும் தேவன் தம்முடைய சாயலாக சிருஷ்டித்தார், பின்பு தேவன் அவர்களை நோக்கி: நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்தி, சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவஜந்துக்களையும் ஆண்டுகொள்ளுங்கள் என்று சொல்லி, தேவன் அவர்களை ஆசீர்வதித்து, அவர்களை ஏதேன் தோட்டத்தில் அழைத்துக்கொண்டுவந்து, அதைப் பண்படுத்தவும் காக்கவும் வைத்தார். மேலும் தேவனாகிய கர்த்தர் மனுஷனை நோக்கி: நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம். ஆனாலும் நன்மைதீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்கவேண்டாம். அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார். ஆதாமும் ஏவாளும் கர்த்தராகிய தேவனோடு ஏதேன் தோட்டத்திலே சந்தோஷத்தோடு நடைபோட்டு வந்தார்கள்.

பரலோக இராட்சியத்தில் தேவ தூதர்களில் முக்கிய ஒரு தூதனாக இருந்த **"லூசிபர்"** என்னும் தேவ தூதன், – ''நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன், வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும், நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன், உன்னதமானவருக்கு ஒப்பாவேன்''– என்றும் தன் இருதயத்தில் சொன்னதின் நிமித்தம், அவனையும் அவனோடு இணைந்த வேறு அனேக தூதர்களும் தேவ சன்னிதானத்திலிருந்து தேவாதி தேவனால் துரத்தப்பட்டனர். இந்த சத்துருவான பிசாசானவன் தந்திரமுள்ள சர்ப்பமாக ஏதேன் தோட்த்தில் ஏவாளை நோக்கி: நீங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்சங்களின் கனியையும் புசிக்கவேண்டாம் என்று தேவன் சொன்னது உண்டோ என்றது. ஸ்திரீ சர்ப்பத்தைப் பார்த்து: நாங்கள் தோட்டத்திலுள்ள விருட்சங்களின் கனிகளைப் புசிக்கலாம், ஆனாலும், தோட்டத்தின்

நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து, தேவன்: நீங்கள் சாகாதபடிக்கு அதைப் புசிக்கவும் அதைத் தொடவும் வேண்டாம் என்று சொன்னார் என்றாள். அப்பொழுது சர்ப்பம் ஸ்திரீயை நோக்கி: நீங்கள் சாகவே சாவதில்லை, நீங்கள் இதைப் புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப்படும் என்றும், நீங்கள் நன்மை தீமை அறிந்து **தேவர்களைப்போல் இருப்பீர்கள்** என்றும் தேவன் அறிவார் என்றது. அப்பொழுது ஸ்திரீயானவள், அந்த விருட்சம் புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியைத் தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாய் இருக்கிறது என்று கண்டு, அதின் கனியைப் பறித்து, புசித்து, தன் புருஷனுக்கும் கொடுத்தாள், அவனும் புசித்தான். இப்படியாக முதல் மனுஷனும் மனுஷியும் பிசாசினுடைய தந்திரத்திற்கும், வஞ்சனைக்கும் ஆளாகி, கர்த்தருடைய கட்டளையை மீறி, விலக்கப்பட்ட கனியைப் புசிப்பதற்குக் காரணம் என்னவெனில், தாங்களும் தேவர்களைப்போல் இருக்கலாம் என்ற நினைவு. இதன் நிமித்தம் அவர்கள் இருவரையும் கர்த்தர் ஏதேன் தோட்டத்திலிருந்து துரத்திவிட்டார்.

மனிதன் தேவர்களைப்போல் ஆகலாம் என்ற சிந்தனையை அன்று ஏதேன் தோட்டத்தில் ஆதாம் ஏவாளுடன் ஆரம்பித்து வைத்த அதே சத்துருவான பிசாசு, இன்றும் அநேகரை உலகம் பூராவும் வஞ்சித்து வருவதால் அநேகர் தங்களைத் தெய்வப் பிறவிகளும், தேவர்களுமாக்கி, மற்ற மனுஷர்கள் தங்களை வணங்குகிற நிலைக்கு ஆளாக்குகிறார்கள். மெய்யான தேவனை அறியாமல் அலைகிற அப்பாவி மக்கள், அறியாமையின் நிமித்தம் அந்த மனிதர்களை, அவர்கள் பாதம் தொட்டு வணங்குவதும், அவர்களையே நம்பி ஜீவிப்பதும் இன்று உலகில் சர்வ சாதாரணமாகிவிட்டது. இந்நிலை எவ்வளவு பாதகமான செயலும், பரிதாபப்பட வேண்டிய நிலையுமாய் இருக்கிறது.

இப்படியாக மனிதனை மனிதன் வணங்கும் நிலமை ஒருபுறம் இருக்க, கடவுள் படைத்த படைப்புக்களைத் தெய்வங்களாக்கி அவைகளுக்குப் பெயரிட்டு, சிலை எழுப்பி, விக்கிரகங்களை செய்வித்து, கோவில்களை அமைத்து வழிபட்டு, விழாவெடுத்து வருகிற இன்னுமொரு சாராரும் பரந்து இருக்கிறதை உலகம்பூராவும் காணலாம்.

மேலும் இன்னுமொரு கூட்ட ஜனம், தேவ பயத்தோடும் பயபக்தியோடும், தேவ வார்த்தைக்கும் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிந்து வாழ்ந்ததின் நிமித்தம் தேவன் அப்படிப்பட்டவர்களுக்கு ஈவாக அருளிய வரங்களால் நடப்பித்த அற்புத அதிசயங்கள் நிமித்தம், அவர்கள் மரித்த பின்பும் அவர்கள் மூலமாக அற்புத அதிசயங்களையும், ஆசீர்வாதங்களையும் பெறுவதற்காக, மரிதுப்போன அவர்களிடம் ஜெபங்களை ஏறெடுக்கிறார்கள். மேலும் அவர்களைப் பரிசுத்தர்களாகப் பிரகடனப்படுத்தி, அவர்களுக்குச் சிலைகளையும் சுரூபங்களையும் உருவாக்கி, ஆலயங்களையும் கட்டி வழிபாடுகளையும் நடத்திவருகிறார்கள்.

**"ஜாதிகள் தங்களை மனுஷரென்று அறியும்படிக்கு, அவர்களுக்குப் பயமுண்டாக்கும், கர்த்தாவே."– சங்கீதம் 9: 20**

இப்படிப்பட்ட தவறான, பிளையான வழிபாடுகள் நடைபெறக்கூடாது என்பதற்காகவே கர்த்தராகிய தேவன் விக்கிரக ஆராதனையைக் குறித்து தெளிவுபட விபரித்து எச்சரித்திருக்கிறார்.

## வேறே தேவர்கள் இருக்க வேண்டாம்

எம்மைப் படைத்த கடவுள்தாமே தமக்கு வரவேண்டிய வணக்கத்தைக் குறித்து பரிசுத்த வேதாகமத்தில் மிகவும் விபரமாகவும் தெளிவாகவும் கொடுத்திருப்பதை நாம் பார்க்கலாம்:

“என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்கவேண்டாம், நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம், உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்துப் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன். என்னிடத்தில் அன்புகூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறைமட்டும் இரக்கஞ்செய்கிறவராயிருக்கிறேன்.”– யாத். 20: 3–6

“கர்த்தர் ஒருவருக்கே ஒழிய வேறே தேவர்களுக்குப் பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக்கடவன்.”– யாத். 22: 20

“நான் உங்களுக்குச் சொன்னவைகள் யாவற்றிலும் சாவதானமாயிருங்கள். அந்நிய தேவர்களின் பேரைச் சொல்லவேண்டாம், அது உன் வாயிலிருந்து பிறக்கக்கேட்கப்படவும் வேண்டாம்.”– யாத்.23: 13

“நீ போய்ச் சேருகிற தேசத்தின் குடிகளோடு உடன்படிக்கைபண்ணாதபடிக்கு எச்சரிக்கையாயிரு, பண்ணினால் அது உன் நடுவில் கண்ணியாயிருக்கும். அவர்களுடைய பலிபீடங்களை இடித்து, அவர்கள் சிலைகளைத் தகர்த்து, அவர்கள் தோப்புகளை வெட்டிப்போடுங்கள். கர்த்தருடைய நாமம் எரிச்சலுள்ளவர் என்பது, அவர் எரிச்சலுள்ள தேவனே ஆகையால், அந்நிய தேவனை நீ பணிந்துகொள்ளவேண்டாம். அந்தத் தேசத்தின் குடிகளோடே உடன்படிக்கைபண்ணுவாயானால், அவர்கள் தங்கள் தேவர்களைச் சோரமார்க்கமாய்ப் பின்பற்றி, தங்களுடைய தேவர்களுக்குப் பலியிடுவார்கள், ஒருவன் உன்னை அழைக்கையில், நீ போய், அவன் பலியிட்டதிலே புசிப்பாய், அவர்கள் குமாரத்திகளில் உன் குமாரருக்குப் பெண்களைக் கொள்ளுவாய், அவர்கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களைச் சோரமார்க்கமாய்ப் பின்பற்றுவதும் அல்லாமல், உன் குமாரரையும் தங்கள் தேவர்களைச் சோரமார்க்கமாய்ப் பின்பற்றும்படி செய்வார்கள். வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்களை உங்களுக்கு உண்டாக்கவேண்டாம்.”– யாத். 34: 12–17

“நீங்கள் உங்களுக்கு விக்கிரகங்களையும் சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலையை நிறுத்தாமலும், சித்திரந்தீர்ந்த கல்லை நமஸ்கரிக்கும்பொருட்டு உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக, நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.”– லேவி. 26: 1

“கர்த்தர் ஒரேபிலே அக்கினியின் நடுவிலிருந்து உங்களோடே பேசின நாளில், நீங்கள் ஒரு ரூபத்தையும் காணவில்லை. ஆகையால் நீங்கள் உங்களைக் கெடுத்துக்கொண்டு, ஆண் உருவும், பெண் உருவும், பூமியிலிருக்கிற யாதொரு மிருகத்தின் உருவும், ஆகாயத்தில் பறக்கிற செட்டையுள்ள யாதொரு பட்சியின் உருவும், பூமியிலுள்ள யாதொரு ஊரும் பிராணியின் உருவும், பூமியின்கீழ்த் தண்ணீரிலுள்ள யாதொரு மச்சத்தின் உருவுமாயிருக்கிற இவைகளில் யாதொரு உருவுக்கு ஒப்பான விக்கிரகத்தை உங்களுக்கு உண்டாக்காதபடிக்கும், உங்கள் கண்களை வானத்திற்கு ஏறெடுத்து, உங்கள் தேவனாகிய கர்த்தர் வானத்தின் கீழெங்கும் இருக்கிற எல்லா ஜனங்களுக்கும் ஏற்படுத்தின

வானத்தின் சர்வ சேனைகளாகிய சந்திர சூரிய நட்சத்திரங்களை நோக்கி, அவைகளைத் தொழுது சேவிக்க இணங்காதபடிக்கும், உங்கள் ஆத்துமாக்களைக்குறித்து மிகவும் எச்சரிக்கையாயிருங்கள்.''– உபா. 4: 15–19

''உங்கள் இருதயம் வஞ்சிக்கப்படாமலும், நீங்கள் வழிவிலகி அந்நிய தேவர்களைச் சேவித்து அவர்களை நமஸ்கரியாமலும் இருக்கும்படி எச்சரிக்கையாயிருங்கள். இல்லாவிடில் கர்த்தருடைய கோபம் உங்கள்மேல் மூண்டு, மழை பெய்யாமற்போகவும், தேசம் தன் பலனைக் கொடாமலிருக்கவும் வானத்தை அடைத்துப்போடுவார், கர்த்தர் உங்களுக்குக் கொடுத்த நல்ல தேசத்திலிருந்து நீங்கள் சீக்கிரத்தில் அழிந்துபோவீர்கள்.''–உபா. 11: 16–17

''உன் தேவனாகிய கர்த்தரின் கண்களுக்கு முன்பாக எந்தப் புருஷனாவது ஸ்திரீயாவது உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற வாசல்கள் ஒன்றில் அக்கிரமஞ்செய்து, அவருடைய உடன்படிக்கையை மீறி, நான் விலக்கியிருக்கிற வேறே தேவர்களையாது சந்திரசூரியர் முதலான வானசேனைகளையாவது சேவித்து, அவைகளை நமஸ்கரிக்கிறதாகக் காணப்பட்டால், அது உன் செவிகேட்க உனக்கு அறிவிக்கப்படும்போது, நீ அதை நன்றாய் விசாரிக்கக்கடவாய், அது மெய் என்றும், அப்படிப்பட்ட அருவருப்பு இஸ்ரவேலில் நடந்தது நிச்சயம் என்றும் கண்டாயானால், அந்த அக்கிரமத்தைச் செய்த புருஷனையாவது ஸ்திரீயையாவது உன் வாசல்களுக்கு வெளியே கொண்டுபோய், அப்படிப்பட்டவர்கள் சாகும்படி கல்லெறியக்கடவாய்.''– உபா. 17: 2–5

## அருவருப்புகளை தேவன் வெறுக்கிறார்

''உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் தேசத்தில் நீ போய்ச் சேரும்போது. அந்த ஜாதிகள் செய்யும் அருவருப்புகளின்படி செய்யக் கற்றுக்கொள்ளவேண்டாம். தன் மகனையாவது தன் மகளையாவது தீக்கடக்கப்பண்ணுகிறவனும், குறிசொல்லுகிறவனும், நாள்பார்க்கிறவனும், அஞ்சனம் பார்க்கிறவனும், சூனியக்காரனும், மந்திரவாதியும், சன்னதக்காரனும், மாயவித்தைக்காரனும், செத்தவர்களிடத்தில் குறிகேட்கிறவனும் உங்களுக்குள்ளே இருக்கவேண்டாம். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவன் எவனும் கர்த்தருக்கு அருவருப்பானவன், இப்படிப்பட்ட அருவருப்புகளின் நிமித்தம் உன் தேவனாகிய கர்த்தர் அவர்களை உன் முன்னின்று துரத்திவிடுகிறார். உன் தேவனாகிய கர்த்தருக்கு முன்பாக நீ உத்தமனாயிருக்கக்கடவாய். நீ துரத்திவிடப்போகிற இந்த ஜாதிகள் நாள்பார்க்கிறவர்களுக்கும் குறிசொல்லுகிறவர்களுக்கும் செவிகொடுக்கிறார்கள், நீ அப்படிச் செய்கிறதற்கு உன் தேவனாகிய கர்த்தர் உத்தரவுகொடார்.''– உபா. 18: 9–14

''கர்த்தருக்கு அருவருப்பான காரியமாகிய தொழிலாளிகளுடைய கைவேலையால் செய்யப்பட்டதும் வார்ப்பிக்கப்பட்டதுமான யாதொரு விக்கிரகத்தை உண்டுபண்ணி ஒளிப்பிடத்திலே வைக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்களாக, அதற்கு ஜனங்களெல்லாரும் பிரதியுத்தரமாக ஆமென் என்று சொல்லக்கடவர்கள்.''– உபா. 27: 15

''சொரூபங்களை வணங்கி, விக்கிரகங்களைப்பற்றிப் பெருமைபாராட்டுகிறயாவரும் வெட்கப்பட்டுப் போவார்களாக, ...''– சங். 97: 7

“எந்த ஜாதியாவது தேவர்களல்லாத தங்கள் தேவர்களை மாற்றினது உண்டோ என்றும் பாருங்கள், என் ஜனங்களோ வீணானவைகளுக்காகத் தங்கள் மகிமையை மாற்றினார்கள். வானங்களே, இதினிமித்தம் பிரமித்துக் கொந்தளித்து, மிகவும் திடுக்கிடுங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். என் ஜனங்கள் இரண்டு தீமைகளைச் செய்தார்கள், ஜீவத்தண்ணீர் ஊற்றாகிய என்னை விட்டுவிட்டார்கள், தண்ணீர் நிற்காத தொட்டிகளாகிய வெடிப்புள்ள தொட்டிகளைத் தங்களுக்கு வெட்டிக் கொண்டார்கள்.”– எரே. 2: 11

## விக்கிரகங்களுக்கு விலகி வாழவேண்டும்

“நாம் தேவனால் உண்டாயிருக்கிறோமென்றும், உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள் கிடக்கிறதென்றும் அறிந்திருக்கிறோம். அன்றியும், நாம் சத்தியமுள்ளவரை அறிந்துகொள்வதற்குத் தேவனுடைய குமாரன் வந்து நமக்குப் புத்தியைத் தந்திருக்கிறாரென்றும் அறிவோம், அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்து என்னப்பட்ட சத்தியமுள்ளவருக்குள்ளும் இருக்கிறோம், இவரே மெய்யான தேவனும் நித்தியஜீவனுமாயிருக்கிறார். பிள்ளைகளே, **நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்துக்கொள்வீர்களாக. ஆமென்**.”– 1 யோவான் 5: 19–21

“ஜெயங்கொள்ளுகிறவன் எல்லாவற்றையும் சுதந்தரித்துக்கொள்ளுவான், நான் அவன் தேவனாயிருப்பேன், அவன் என் குமாரனாயிருப்பான். பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், **விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் என்றார்**.”– வெளி. 21: 7–8

“நம்முடைய தேவன் பரலோகத்தில் இருக்கிறார், தமக்குச் சித்தமானயாவையும் செய்கிறார். **அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் பொன்னும், மனுஷருடைய கைவேலையுமாயிருக்கிறது**. அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது, அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது. அவைகளுக்குக் காதுகளிருந்தும்கேளாது, அவைகளுக்கு மூக்கிருந்தும் முகராது. அவைகளுக்குக் கைகளிருந்தும்தொடாது, அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது, தங்கள் தொண்டையால் சத்தமிடவும் மாட்டாது. அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும், அவைகளைப்போலவே இருக்கிறார்கள்.”– சங். 115: 3–8

“**அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் பொன்னும், மனுஷருடைய கைவேலையுமாயிருக்கிறது**. அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது, அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது. அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது, அவைகளுடைய வாயிலே சுவாசமுமில்லை. அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள்யாவரும், அவைகளைப்போல் இருக்கிறார்கள்.”– சங். 15: 15–18

“இப்படியிருக்க, தேவனை யாருக்கு ஒப்பிடுவீர்கள்? எந்தச் சாயலை அவருக்கு ஒப்பிடுவீர்கள்? **கன்னான் ஒரு சுரூபத்தை வார்க்கிறான், தட்டான் பொன்தகட்டால் அதை மூடி, அதற்கு வெள்ளிச்சங்கிலிகளைப் பொருந்தவைக்கிறான். அதற்குக் கொடுக்க**

**வகையில்லாதவன் உளுத்துப்போகாத மரத்தைத் தெரிந்துகொண்டு, அசையாத ஒரு சுரூபத்தைச் செய்யும்படி நிபுணனான ஒரு தச்சனைத் தேடுகிறான். நீங்கள் அறியீர்களா?** நீங்கள் கேள்விப்படவில்லையா? ஆதிமுதல் உங்களுக்குத் தெரிவிக்கப்படவில்லையா? பூமி அஸ்திபாரப்பட்டது முதல் உணராதிருக்கிறீர்களா? அவர் பூமி உருண்டையின்மேல் வீற்றிருக்கிறவர், அதின் குடிகள் வெட்டுக்கிளிகளைப்போல இருக்கிறார்கள், அவர் வானங்களை மெல்லிய திரையாகப் பரப்பி, அவைகளைக் குடியிருக்கிறதற்கான கூடாரமாக விரிக்கிறார்.'' – எசா. 40: 18–22

## விக்கிரகங்களெல்லாம் மனிதனின் கைவேலைதான்

''விக்கிரகங்களை உருவாக்குகிற யாவரும் வீணர், அவர்களால் இச்சிக்கப்பட்டவைகள் ஒன்றுக்கும் உதவாது, அவைகள் ஒன்றும் காணாமலும், ஒன்றும் அறியாமலும் இருக்கிறதென்று தங்களுக்கு வெட்கமுண்டாக அவைகளுக்குத் தாங்களே சாட்சிகளாயிருக்கிறார்கள். ஒன்றுக்கும் உதவாத தெய்வத்தை உருவாக்கி, விக்கிரகத்தை வார்ப்பிக்கிறவன் எப்படிப்பட்டவன்? இதோ, அவனுடைய கூட்டாளிகளெல்லாரும் வெட்கமடைவார்கள், தொழிலாளிகள் நரஜீவன்கள்தானேஸ அவர்கள் எல்லாரும் கூடிவந்து நிற்கட்டும், அவர்கள் ஏகமாய்த் திகைத்து வெட்கப்படுவார்கள். கொல்லன் இரும்பைக் குறட்டால் இடுக்கி, உலையிலே காயவைத்து, சுத்திகளால் அதை உருவாக்கி, தன் புயபலத்தினால் அதைப் பண்படுத்துகிறான், பட்டினியாயிருந்து பெலனற்றுப்போகிறான், தண்ணீர் குடியாமல் களைத்துப்போகிறான். தச்சன் நூல்பிடித்து, மட்டப்பலகையால் மரத்துக்குத் குறிபோட்டு, உளிகளினால் உருப்படுத்தி, கவராசத்தினால் அதை வகுத்து, மனுஷ சாயலாக மனுஷரூபத்தின்படி உருவமாக்குகிறான், அதைக் கோவிலிலே நாட்டி வைக்கிறான். அவன் தனக்குக் கேதுருக்களை வெட்டுகிறான், ஒரு மருதமரத்தையாவது ஒரு கர்வாலிமரத்தையாவது, தெரிந்துகொண்டு, காட்டுமரங்களிலே பெலத்த மரத்தைத் தன் காரியத்துக்காக வளர்க்கிறான், அல்லது அசோகமரத்தை நடுகிறான், மழை அதை வளரச்செய்யும். மனுஷனுக்கு அவைகள் அடுப்புக்காகும்போது, அவன் அவைகளில் எடுத்துக் குளிர்காய்கிறான், நெருப்பைமூட்டி அப்பமும் சுடுகிறான், அதினால் ஒரு தெய்வத்தையும் உண்டுபண்ணி, அதைப் பணிந்துகொள்ளுகிறான், ஒரு விக்கிரகத்தையும் அதினால் செய்து, அதை வணங்குகிறான். அதில் ஒரு துண்டை அடுப்பில் எரிக்கிறான், ஒரு துண்டினால் இறைச்சியைச் சமைத்துப் புசித்து, பொரியலைப் பொரித்து திருப்தியாகி, குளிருங்காய்ந்து: ஆஆ, அனலானேன், நெருப்பைக் கண்டேன் என்று சொல்லிஸ அதில் மீதியான துண்டைத் தனக்கு விக்கிரகதெய்வமாகச் செய்து, அதற்குமுன் விழுந்து, அதை வணங்கி: நீ என் தெய்வம், என்னை இரட்சிக்கவேண்டும் அப்பத்தையும் சுட்டு, இறைச்சியையும் பொரித்துப் புசித்தேன், அதில் மீதியான துண்டைநான் அருவருப்பான விக்கிரகமாக்கலாமா? ஒரு மரக்கட்டையை வணங்கலாமா என்று சொல்ல, தன் மனதில் அவனுக்குத் தோன்றவில்லை, அம்மாத்திரம் அறிவும் சொரணையும் இல்லை. அவன் சாம்பலை மேய்கிறான், வஞ்சிக்கப்பட்டமனம் அவனை மோசப்படுத்தினது, அவன் தன் ஆத்துமாவைத் தப்புவிக்காமலும்: என் வலது கையிலே அபத்தம் அல்லவோ இருக்கிறதென்று சொல்லாமலும் இருக்கிறதென்று சொல்லாமலும் இருக்கிறான். என்று அதை நோக்கி மன்றாடுகிறான். அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள், காணாதபடிக்கு அவர்கள் கண்களும், உணராதபடிக்கு அவர்கள் இருதயமும் அடைக்கப்பட்டிருக்கிறது. அதில் பாதியை அடுப்பில் எரித்தேன், அதின் தழலின்மேல் அப்பத்தையும் சுட்டு, இறைச்சியையும் பொரித்துப் புசித்தேன், அதில் மீதியான துண்டைநான் அருவருப்பான விக்கிரகமாக்கலாமா? ஒரு மரக்கட்டையை வணங்கலாமா என்று சொல்ல, தன் மனதில் அவனுக்குத் தோன்றவில்லை, அம்மாத்திரம் அறிவும் சொரணையும் இல்லை. அவன் சாம்பலை மேய்கிறான், வஞ்சிக்கப்பட்டமனம் அவனை மோசப்படுத்தினது, அவன் தன் ஆத்துமாவைத் தப்புவிக்காமலும்: என் வலது

கையிலே அபத்தம் அல்லவோ இருக்கிறதென்று சொல்லாமலும் இருக்கிறதென்று சொல்லாமலும் இருக்கிறான்.''– ஏசா. 44: 9–20

''திருடன் அகப்படுகிறபோது, எப்படி வெட்கப்படுகிறானோ, அப்படியே இஸ்ரவேல் வம்சத்தார் வெட்கப்படுவார்கள், கட்டையைப் பார்த்து, நீ என் தகப்பன் என்றும், கல்லைப்பார்த்து, நீ என்னைப்பெற்றாய் என்றும் சொல்லுகிற அவர்களும், அவர்கள் ராஜாக்களும், அவர்கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்களும், அவர்கள் தீர்க்கதரிசிகளும் வெட்கப்படுவார்கள். அவர்கள் தங்கள் முகத்தையல்ல, தங்கள் முதுகை எனக்குக் காட்டினார்கள், தங்கள் ஆபத்துக்காலத்திலோ எழுந்து எங்களை இரட்சியும் என்கிறார்கள். நீ உனக்கு உண்டுபண்ணின தேவர்கள் எங்கே? உன் ஆபத்துக்காலத்தில் உன்னை இரட்சிக்கக்கூடுமானால் அவைகள் எழும்பட்டும், யூதாவே, உன் பட்டணங்களின் இலக்கமும், உன் தேவர்களின் இலக்கமும் சரி. என்னோடே நீங்கள் வழக்காடுவானேன்? நீங்கள் அனைவரும் எனக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினீர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.''– எரே. 2: 26–29

''.... கர்த்தர் உங்களுக்குச் சொல்லுகிற வசனத்தைக் கேளுங்கள்: புறஜாதிகளுடைய மார்க்கத்தைக் கற்றுக்கொள்ளாதிருங்கள், வானத்தின் அடையாளங்களாலே புறஜாதிகள் கலங்குகிறார்களே என்று சொல்லி, நீங்கள் அவைகளாலே கலங்காதிருங்கள். ஜனங்களின் வழிபாடுகள் வீணாயிருக்கிறது, காட்டில் ஒரு மரத்தை வெட்டுகிறார்கள், அது தச்சன் கையாடுகிற வாச்சியால் பணிப்படும். வெள்ளியினாலும் பொன்னினாலும் அதை அலங்கரித்து, அது அசையாத படிக்கு அதை ஆணிகளாலும் சுத்திகளாலும் உறுதியாக்குகிறார்கள். அவைகள் பனையைப்போல நெட்டையாய் நிற்கிறது, அவைகள் பேசமாட்டாதவைகள், அவைகள் நடக்கமாட்டாததினால் சுமக்கப்படவேண்டும், அவைகளுக்குப் பயப்படவேண்டாம், அவைகள் தீமைசெய்யக்கூடாது, நன்மைசெய்யவும் அவைகளுக்குச் சக்தி இல்லையென்று கர்த்தர் சொல்லுகிறார். கர்த்தாவே, உமக்கு ஒப்பானவன் இல்லை, நீரே பெரியவர், உமது நாமமே வல்லமையில் பெரியது.''– எரே. 10: 1–6

## விக்கிரக ஆராதனை தண்டனைக்குரியது

''உன் தேவனாகிய கர்த்தரின் கண்களுக்கு முன்பாக எந்தப் புருஷனாவது ஸ்திரீயாவது உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற வாசல்கள் ஒன்றில் அக்கிரமஞ்செய்து, அவருடைய உடன்படிக்கையை மீறி, நான் விலக்கியிருக்கிற வேறே தேவர்களையாது சந்திரசூரியர் முதலான வானசேனைகளையாவது சேவித்து, அவைகளை நமஸ்கரிக்கிறதாகக் காணப்பட்டால், அது உன் செவிகேட்க உனக்கு அறிவிக்கப்படும்போது, நீ அதை நன்றாய் விசாரிக்கக்கடவாய், அது மெய் என்றும், அப்படிப்பட்ட அருவருப்பு இஸ்ரவேலில் நடந்தது நிச்சயம் என்றும் கண்டாயானால், அந்த அக்கிரமத்தைச் செய்த புருஷனையாவது ஸ்திரீயையாவது உன் வாசல்களுக்கு வெளியே கொண்டுபோய், அப்படிப்பட்டவர்கள் சாகும்படி கல்லெறியக்கடவாய்.''– உபா. 17: 2–5

''யூதாவின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளிலும், நீங்களும் உங்கள் பிதாக்களும் உங்கள் ராஜாக்களும், உங்கள் பிரபுக்களும், தேசத்தின் ஜனங்களும் காட்டின தூபங்களை அல்லவோ கர்த்தர் நினைத்துத் தம்முடைய மனதிலே வைத்துக்கொண்டார்.

உங்கள் கிரியைகளின் பொல்லாப்பையும், நீங்கள் செய்த அருவருப்புகளையும், கர்த்தர் அப்புறம் பொறுத்திருக்கக்கூடாதபடியினால் அல்லவோ, உங்கள் தேசம் இந்நாளில் இருக்கிறபடி குடியற்ற அந்தரவெளியும் பாழும் சாபமுமாயிற்று. நீங்கள் துபங்காட்டி, கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்து, கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமலும், அவருடைய வேதத்துக்கும், அவருடைய கட்டளைகளுக்கும், அவருடைய சாட்சிகளுக்கும் இணங்கி நடவாமலும் போனபடியினாலே இந்நாளில் இருக்கிறபடி இந்தத் தீங்கு உங்களுக்கு நேரிட்டது என்றான்.''– எரே. 44: 21–23

''மேலும், பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி, வேசித்தனமும், மற்றெந்த அசுத்தமும், பொருளாசையும் ஆகிய இவைகளின் பேர்முதலாய் உங்களுக்குள்ளே சொல்லப்படவுங்கூடாது. அப்படியே வம்பும், புத்தியீனமான பேச்சும், பரியாசமும் தகாதவைகள், ஸ்தோத்திரஞ்செய்தலே தகும். விபசாரக்காரனாவது, அசுத்தனாவது, **விக்கிரகாராதனைக்காரனாகிய பொருளாசைக்காரனாவது தேவனுடைய ராஜ்யமாகிய கிறிஸ்துவின் ராஜ்யத்திலே சுதந்தரமடைவதில்லையென்று அறிந்திருக்கிறீர்களே.** இப்படிப்பட்டவைகளினிமித்தமாகக் கீழ்ப்படியாமையின் பிள்ளைகள்மேல் தேவகோபாக்கினை வருவதால், ஒருவனும் உங்களை வீண்வார்த்தைகளினாலே மோசம்போக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள், அவர்களுக்குப் பங்காளிகளாகாதிருங்கள்.''– எபே. 5: 3–7

''அவர்களுக்குப் பின்னே மூன்றாம்துதன் வந்து, மிகுந்த சத்தமிட்டு: **மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் வணங்கித் தன் நெற்றியிலாவது தன் கையிலாவது அதின் முத்திரையைத் தரித்துக்கொள்ளுகிறவனெவனோ, அவன் தேவனுடைய கோபாக்கினையாகிய பாத்திரத்திலே கலப்பில்லாமல் வார்க்கப்பட்ட அவருடைய உக்கிரமாகிய மதுவைக் குடித்து,** பரிசுத்த துதர்களுக்குமுன்பாகவும், ஆட்டுக்குட்டியானவருக்குமுன்பாகவும் அக்கினியினாலும் கந்தகத்தினாலும் வாதிக்கப்படுவான். அவர்களுடைய வாதையின் புகை சதாகாலங்களிலும் எழும்பும்: மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் வணங்குகிறவர்களுக்கும், அதினுடைய நாமத்தின் முத்திரையைத் தரித்துக்கொள்ளுகிற எவனுக்கும் இரவும் பகலும் இளைப்பாறுதலிராது.''– வெளி. 14: 9–11

''பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், **விக்கிரகாராதனைக்காரரும்,** பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் என்றார்.''– வெளி. 21: 8

## விக்கிரக ஆராதனையில் விழுந்துபோன ஜனம்

விக்கிரகங்களை வணங்குவது தவறு என்பதையும், அது தேவனுக்கெதிரான பாவம் என்பதையும், அதனால் தேவ கோபாக்கினை மனுஷர்மேல் வரும் என்பதை அறிந்திருந்தும் விக்கிரக ஆராதனையில் விழுந்துபோனவர்கள் அன்றுதொட்டு இன்றுவரை உலகில் இருந்துகொண்டே வருகின்றனர். அப்படியான சிலை வழிபாடுகளில் ஈடுபட்டவர்கள் தேவ கோபத்திற்கு ஆளான நிலமைகளை பரிசுத்த வேதாகமத்தில் விபரித்திருப்பதை நாம் காணக்கூடியதாய் இருக்கிறது. எனவே, சிலை வணக்கம், விக்கிரக ஆராதனை, மனித வழிபாடு, படைப்புகளை ஆசரிப்பது போன்றவை மெய்யான தேவனை

எரிச்சல்படுத்துவதோடு, அவற்றை அவர் வெறுக்கிறார், எதிர்க்கிறார் என்பதை, இன்று நாம் அறிந்தவர்களாக சிந்தித்து உணர்ந்து செயற்படவேண்டும்.

**விக்கிரக ஆராதனையில் விழுந்துபோனவர்களின் சில சம்பவங்களை பரிசுத்த வேதாகமத்திலிருந்து கவனத்துப் பார்ப்போம்:**

## 1. இஸ்ரவேலர் கன்றுக்குட்டியை வார்ப்பித்து வணங்கினார்கள்

“மோசே மலையிலிருந்து இறங்கிவரத் தாமதிக்கிறதை ஜனங்கள் கண்டபோது, அவர்கள் ஆரோனிடத்தில் கூட்டங்கூடி, அவனை நோக்கி: எகிப்து தேசத்திலிருந்து எங்களை அழைத்துக்கொண்டுவந்த அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ அறியோம், ஆதலால் நீர் எழுந்து, எங்களுக்கு முன்செல்லும் தெய்வங்களை எங்களுக்காக உண்டுபண்ணும் என்றார்கள். அதற்கு ஆரோன்: உங்கள் மனைவிகள் குமாரர் குமாரத்திகளுடைய காதுகளில் இருக்கிற பொன்னணிகளைக் கழற்றி, என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றான். **ஜனங்கள் எல்லாரும் தங்கள் காதுகளில் இருந்த பொன்னணிகளைக் கழற்றி, ஆரோனிடத்தில் கொண்டுவந்தார்கள். அவர்கள் கையிலிருந்து அவன் அந்தப் பொன்னை வாங்கி, சிற்பக்கருவியினால் கருப்பிடித்து, ஒரு கன்றுக்குட்டியை வார்ப்பித்தான்.** அப்பொழுது அவர்கள்: இஸ்ரவேலரே, உங்களை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டுவந்த உங்கள் தெய்வங்கள் இவைகளே என்றார்கள். ஆரோன் அதைப் பார்த்து, அதற்கு முன்பாக ஒரு பலிபீடத்தைக் கட்டி, நாளைக்குக் கர்த்தருக்குப் பண்டிகை என்று கூறினான்.

மறுநாள் அவர்கள் அதிகாலையில் எழுந்து, சர்வாங்க தகனபலிகளையிட்டு, சமாதானபலிகளைச் செலுத்தினார்கள், பின்பு, ஜனங்கள் புசிக்கவும் குடிக்கவும் உட்கார்ந்து, விளையாட எழுந்தார்கள். அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி: நீ இறங்கிப்போ, எகிப்துதேசத்திலிருந்து நீ நடத்திக்கொண்டுவந்த உன் ஜனங்கள் தங்களைக் கெடுத்துக்கொண்டார்கள். அவர்களுக்கு நான் விதித்த வழியை அவர்கள் சீக்கிரமாய் விட்டு விலகினார்கள், அவர்கள் தங்களுக்கு ஒரு கன்றுக்குட்டியை வார்ப்பித்து, அதைப் பணிந்துகொண்டு, அதற்குப் பலியிட்டு: இஸ்ரவேலரே, உங்களை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டுவந்த உங்கள் தெய்வங்கள் இவைகளே என்று சொன்னார்கள் என்றார். பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி: இந்த ஜனங்களைப் பார்த்தேன், இவர்கள் வணங்காக்கழுத்துள்ள ஜனங்கள். ஆகையால் என் கோபம் இவர்கள்மேல் மூளவும், நான் இவர்களை அழித்துப்போடவும் நீ என்னை விட்டுவிடு, உன்னை ஒரு பெரிய ஜாதியாக்குவேன் என்றார்.”– யாத் 32: 1–10

## 2. பாகால்களைச் சேவித்தார்கள்

“ … இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, பாகால்களைச் சேவித்து, தங்கள் பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின அவர்களுடைய தேவனாகிய கர்த்தரை விட்டு, தங்களைச் சுற்றிலும் இருக்கிற ஜனங்களுடைய தேவர்களாகிய அந்நிய தேவர்களைப் பின்பற்றிப்போய், அவர்களைப் பணிந்துகொண்டு, கர்த்தருக்குக் கோபமூட்டினார்கள். **அவர்கள் கர்த்தரை விட்டு, பாகாலையும் அஸ்தரோத்தையும் சேவித்தார்கள். அப்பொழுது கர்த்தர் இஸ்ரவேலின்மேல் கோபமூண்டவராகி, அவர்கள் அப்புறம் தங்கள் சத்துருக்களுக்கு முன்பாக நிற்கக்கூடாதபடி கொள்ளையிடுகிற கொள்ளைக்காரர் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்து, அவர்களைச் சுற்றிலும் இருக்கிற அவர்கள் பகைஞரின் கையிலே விற்றுப்போட்டார்**. கர்த்தர் சொல்லியபடியும், கர்த்தர் அவர்களுக்கு ஆணையிட்டிருந்தபடியும், அவர்கள் புறப்பட்டுப்போகிற இடமெல்லாம் கர்த்தருடைய கை தீமைக்கென்றே அவர்களுக்கு விரோதமாயிருந்தது, மிகவும் நெருக்கப்பட்டார்கள்.”– நியா.2: 11–15

## 3. வானத்தின் சேனைகளையெல்லாம் பணிந்துகொண்டனர்

''எகிப்தின் ராஜாவாகிய பார்வோனுடைய கையின்கீழிருந்த தங்களை எகிப்து தேசத்திலிருந்து வரப்பண்ணின தங்கள் தேவனாகிய கர்த்தருக்கு விரோதமாக இஸ்ரவேல் புத்திரர் பாவஞ்செய்து, அந்நிய தேவர்களுக்குப் பயந்து நடந்து, கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதிகளின் வழிபாடுகளிலும் இஸ்ரவேல் ராஜாக்களின் வழிபாடுகளிலும் நடந்துகொண்டிருந்தார்கள். செய்யத்தகாத காரியங்களை இஸ்ரவேல் புத்திரர் தங்கள் தேவனாகிய கர்த்தருக்கு விரோதமாக இரகசியத்தில் செய்ததுமன்றி, காவல்காக்கிற கோபுரங்கள் தொடங்கி அரணான பட்டணங்கள்மட்டுமுள்ள தங்கள் ஊர்களிலெல்லாம் தங்களுக்கு **மேடைகளையும் கட்டி, உயரமான சகல மேட்டின்மேலும் பச்சையான சகல மரத்தின்கீழும் தங்களுக்குச் சிலைகளையும் விக்கிரத் தோப்புகளையும் நிறுத்தி, கர்த்தர் தங்களை விட்டுக் குடிவிலக்கின ஜாதிகளைப்போல, சகல மேடைகளிலும் தூபங்காட்டி, கர்த்தருக்குக் கோபமுண்டாகத் துர்க்கிரியைகளைச் செய்து, இப்படிச் செய்யத்தகாது என்று கர்த்தர் தங்களுக்குச் சொல்லியிருந்தும், நரகலான விக்கிரகங்களைச் சேவித்துவந்தார்கள்**. நீங்கள் உங்கள் பொல்லாத வழிகளைவிட்டுத் திரும்பி, நான் உங்கள் பிதாக்களுக்குக் கட்டளையிட்டதும், என் ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு உங்களுக்குச் சொல்லியனுப்பினதுமான நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் என் கற்பனைகளையும் என் கட்டளைகளையும் கைக்கொள்ளுங்கள் என்று கர்த்தர் தீர்க்கதரிசிகள் ஞானதிருஷ்டிக்காரர் எல்லாரையுங்கொண்டு இஸ்ரவேலுக்கும் யூதாவுக்கும் திடச்சாட்சியாய் எச்சரித்துக்கொண்டிருந்தும், அவர்கள் செவிகொடாமல், தங்கள் தேவனாகிய கர்த்தர்மேல் விசுவாசியாமற்போன கடினக் கழுத்துள்ள தங்கள் பிதாக்களைப்போல், தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி, அவருடைய கட்டளைகளையும், அவர் தங்கள் பிதாக்களோடே பண்ணின அவருடைய உடன்படிக்கையையும், அவர் தங்களுக்குத் திடச்சாட்சியாய்க் காண்பித்த அவருடைய சாட்சிகளையும் வெறுத்துவிட்டு, **வீணான விக்கிரகங்களைப் பின்பற்றி வீணராகி, அவர்களைச் சுற்றிலும் இருக்கிறவர்களைப்போல, செய்ய வேண்டாமென்று கர்த்தர் தங்களுக்குக் கட்டளையிட்டு விலக்கியிருந்த ஜாதிகளுக்குப் பின்சென்று, தங்கள் தேவனாகிய கர்த்தரின் கற்பனைகளையெல்லாம் விட்டுவிட்டு, இரண்டு கன்றுக்குட்டிகளாகிய வார்ப்பித்த விக்கிரகங்களைத் தங்களுக்கு உண்டாக்கி, விக்கிரகத் தோப்புகளை நாட்டி, வானத்தின் சேனைகளையெல்லாம் பணிந்துகொண்டு, பாகாலைச் சேவித்தார்கள். அவர்கள் தங்கள் குமாரரையும் தங்கள் குமாரத்திகளையும் தீக்கடக்கப்பண்ணி, குறிகேட்டு நிமித்தங்கள் பார்த்து, கர்த்தருக்குக் கோபமுண்டாக்க அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்கிறதற்குத் தங்களை விற்றுப் போட்டார்கள்**. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின்மேல் மிகவும் கோபமடைந்து, அவர்களைத் தம்முடைய முகத்தைவிட்டு அகற்றினார், யூதாகோத்திரமாத்திரமே மீதியாயிற்று.''– 2 ராஜா. 17: 7–18

## 4. வெட்டப்பட்ட ஒரு சுரூபம் வார்ப்பிக்கப்பட்ட ஒரு விக்கிரகம்

''மீகா என்னும் பேருள்ள ஒரு மனுஷன் இருந்தான். அவன் தன் தாயை நோக்கி: உன்னிடத்திலிருந்த ஆயிரத்து நூறு வெள்ளிக்காசு களவுபோயிற்றே, அதைக் குறித்து என் காதுகள் கேட்க நீ சாபமிட்டாயே, அந்தப் பணம், இதோ, என்னிடத்தில் இருக்கிறது, அதை எடுத்தவன் நான்தான் என்றான். அதற்கு அவன் தாய்: என் மகனே, நீ கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுவாய் என்றாள். அவன் அந்த ஆயிரத்து நூறு வெள்ளிக்காசைத் தன் தாயினிடத்தில் திரும்பக் கொடுத்தான், அவள்: வெட்டப்பட்ட ஒரு சுரூபத்தையும் வார்ப்பிக்கப்பட்ட ஒரு விக்கிரகத்தையும் உண்டுபண்ண, நான் என் கையிலிருந்த இந்த வெள்ளியை என் மகனுக்காக முற்றிலும் கர்த்தருக்கென்று நியமித்தேன், இப்போதும் இதை உனக்குத் திரும்பக் கொடுக்கிறேன் என்றாள். அவன் அந்த வெள்ளியைத் தன் தாய்க்குத்

திரும்பக் கொடுத்தான், அப்பொழுது **அவன் தாய் இருநூறு வெள்ளிக்காசை எடுத்து, தட்டான் கையிலே கொடுத்தாள், அவன் அதினாலே, வெட்டப்பட்ட ஒரு சுரூபத்தையும் வார்ப்பிக்கப்பட்ட ஒரு விக்கிரகத்தையும் பண்ணினான்**, அவைகள் மீகாவின் வீட்டில் இருந்தது. மீகா, சுவாமிக்கு ஒரு அறைவீட்டை நியமித்து வைத்திருந்தான், அவன் ஒரு ஏபோத்தையும் சுரூபங்களையும் உண்டுபண்ணி, தன் குமாரரில் ஒருவனைப் பிரதிஷ்டைபண்ணினான், இவன் அவனுக்கு ஆசாரியனானான். அந்நாட்களில் இஸ்ரவேலிலே ராஜா இல்லை. அவனவன் தன்தன் பார்வைக்குச் சரிப்போனபடி செய்துவந்தான்.''– நியா. 17: 1–6

## 5. சாலொமோன் ராஜா தன் மனைவிகள் நிமித்தம் அருவருப்புகளை பின்பற்றினான்

''சாலொமோன் வயதுசென்றபோது, **அவனுடைய மனைவிகள் அவன் இருதயத்தை அந்நியதேவர்களைப் பின்பற்றும்படி சாயப்பண்ணினார்கள்**, அதினால் அவனுடைய இருதயம் அவன் தகப்பனாகிய தாவீதின் இருதயத்தைப்போல, தன் தேவனாகிய கர்த்தரோடே உத்தமமாயிருக்கவில்லை. **சாலொமோன் சீதோனியரின் தேவியாகிய அஸ்தரோத்தையும், அம்மோனியரின் அருவருப்பாகிய மில்கோமையும் பின்பற்றினான்**. சாலொமோன் தன் தகப்பனாகிய தாவீதைப்போல கர்த்தரைப் பூரணமாய்ப் பின்பற்றாமல், கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். அப்பொழுது சாலொமோன் எருசலேமுக்கு எதிரான மலையிலே மோவாபியரின் அருவருப்பாகிய காமோசுக்கும், அம்மோன் புத்திரரின் அருவருப்பாகிய மோளோகுக்கும் மேடையைக் கட்டினான். இப்படியே தங்கள் தேவர்களுக்குத் தூபங்காட்டிப் பலியிடுகிற அந்நியஜாதியாரான தன் ஸ்திரீகள் எல்லாருக்காகவும் செய்தான். ஆகையால் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சாலொமோனுக்கு இரண்டுவிசை தரிசனமாகி, அந்நிய தேவர்களைப் பின்பற்றவேண்டாம் என்று கட்டளையிட்டிருந்தும், அவன் கர்த்தரை விட்டுத் தன் இருதயத்தைத் திருப்பி, அவர் கற்பித்ததைக் கைக்கொள்ளாமற்போனதினால் கர்த்தர் அவன்மேல் கோபமானார். ஆகையால் கர்த்தர் சாலொமோனை நோக்கி: நான் உனக்குக் கட்டளையிட்ட என் உடன்படிக்கையையும் என் கட்டளைகளையும் நீ கைக்கொள்ளாமற்போய் இந்தக் காரியத்தைச் செய்தபடியினால், ராஜ்யபாரத்தை உன்னிடத்திலிருந்து பிடுங்கி, அதை உன் ஊழியக்காரனுக்குக் கொடுப்பேன். ஆகிலும் உன் தகப்பனாகிய தாவீதினிமித்தம், நான் அதை உன் நாட்களிலே செய்வதில்லை, உன் குமாரனுடைய கையினின்று அதைப் பிடுங்குவேன்.''– 1 ராஜா 11: 4–12

## 6. ராஜா தன் உயிரைக் காக்க கன்றுக்குட்டிகளை தேவர்களாக்கினான்

''இஸ்ரவேல் ராஜாவாகிய யெரொபெயாம் தமது ஜனங்கள் எருசலேமிலுள்ள கர்த்தருடைய ஆலயத்திலே பலிகளைச் செலுத்தப்போனால், அந்த ஜனங்களின் இருதயம் யூதாவின் ராஜாவாகிய ரெகொபெயாம் என்னும் தங்கள் ஆண்டவன் வசமாய்த் திரும்பி, **அவர்கள் என்னைக் கொன்றுபோட்டு, யூதாவின் ராஜாவாகிய ரெகொபெயாமின் பாரிசமாய்ப் போய்விடுவார்கள் என்று தன் மனதிலே சிந்தித்துக்கொண்டிருந்தான். ஆகையால் ராஜாவானவன் யோசனைபண்ணி, பொன்னினால் இரண்டு கன்றுக்குட்டிகளை உண்டாக்கி, ஜனங்களைப் பார்த்து: நீங்கள் எருசலேமுக்குப் போகிறது உங்களுக்கு வருத்தம், இஸ்ரவேலரே, இதோ, இவைகள் உங்களை எகிப்துதேசத்திலிருந்து வரப்பண்ணின உங்கள் தேவர்கள் என்று சொல்லி, ஒன்றைப் பெத்தேலிலும், ஒன்றைத் தாணிலும் ஸ்தாபித்தான்.** இந்தக் காரியம் பாவமாயிற்று, ஜனங்கள் இந்த ஒரு கன்றுக்குட்டிக்காகத் தாண்மட்டும் போவார்கள். அவன் மேடையாகிய ஒரு கோவிலையும் கட்டி, லேவியின் புத்திரராயிராத ஜனத்தில் ஈனமானவர்களை ஆசாரியராக்கினான். யூதாவில் ஆசரிக்கப்படும்

பண்டிகைக்கொப்பாக எட்டாம் மாதம் பதினைந்தாம் தேதியிலே யெரொபெயாம் ஒரு பண்டிகையையும் கொண்டாடி, பலிபீடத்தின்மேல் பலியிட்டான், அப்படியே பெத்தேலிலே தான் உண்டாக்கின கன்றுக்குட்டிகளுக்குப் பலியிட்டு, தான் உண்டுபண்ணின மேடைகளின் ஆசாரியர்களைப் பெத்தேலிலே ஸ்தாபித்து, தன் மனதிலே தானே நியமித்துக்கொண்ட எட்டாம் மாதம் பதினைந்தாம் தேதியிலே பெத்தேலில் தான் உண்டாக்கின பலிபீடத்தின்மேல் பலியிட்டு, இஸ்ரவேல் புத்திரருக்குப் பண்டிகையை ஏற்படுத்தி, பலிபீடத்தின்மேல் பலியிட்டுத் துபங்காட்டினான்.''– 1 ராஜா 12: 26–33

## 7. யூதாவின் ராஜா வானத்தின் சேனைகளுக்கெல்லாம் பலிபீடங்களைக் கட்டினான்

''மனாசே ராஜாவாகிறபோது பன்னிரண்டு வயதாயிருந்து, ஐம்பத்தைந்து வருஷம் எருசலேமில் அரசாண்டான், அவன் தாயின்பேர் எப்சிபாள். கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதிகளுடைய அருவருப்புகளின்படியே, அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து, தன் தகப்பனாகிய எசேக்கியா இடித்துப்போட்ட மேடைகளைத் திரும்பவும் கட்டி, பாகாலுக்குப் பலிபீடங்களை எடுப்பித்து, இஸ்ரவேலின் ராஜாவாகிய ஆகாப் செய்ததுபோல விக்கிரகத்தோப்பை உண்டாக்கி, வானத்தின் சேனைகளையெல்லாம் பணிந்துகொண்டு அவைகளைச் சேவித்தான். எருசலேமிலே என் நாமத்தை விளங்கப்பண்ணுவேன் என்று கர்த்தர் சொல்லிக் குறித்த **கர்த்தருடைய ஆலயத்திலே அவன் பலிபீடங்களைக் கட்டி, கர்த்தருடைய ஆலயத்தின் இரண்டு பிராகாரங்களிலும் வானத்தின் சேனைகளுக்கெல்லாம் பலிபீடங்களைக் கட்டி, தன் குமாரனைத் தீமிதிக்கப்பண்ணி, நாள்பார்க்கிறவனும் நிமித்தம்பார்க்கிறவனுமாயிருந்து, அஞ்சனம் பார்க்கிறவர்களையும் குறிசொல்லுகிறவர்களையும் வைத்து, கர்த்தருக்குக் கோபமுண்டாக அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதை மிகுதியாய்ச் செய்தான்**. இந்த ஆலயத்திலும், நான் இஸ்ரவேலின் சகல கோத்திரங்களிலுமிருந்து தெரிந்துகொண்ட எருசலேமிலும், என் நாமத்தை என்றைக்கும் விளங்கப்பண்ணுவேன் என்று கர்த்தர் தாவீதோடும் அவன் குமாரனாகிய சாலொமோனோடும் சொல்லிக் குறித்த ஆலயத்திலே அவன் பண்ணின தோப்புவிக்கிரகத்தை வைத்தான். நான் அவர்களுக்குக் கற்பித்த எல்லாவற்றின்படியேயும், என் தாசனாகிய மோசே அவர்களுக்குக் கற்பித்த எல்லா நியாயப்பிரமாணத்தின்படியேயும் செய்ய ஜாக்கிரதையாய் இருந்தார்களேயானால், நான் இனி இஸ்ரவேலின் காலை அவர்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தேசத்தைவிட்டு அலையப்பண்ணுவதில்லை என்று சொல்லியிருந்தார். ஆனாலும் அவர்கள் கேளாதேபோனார்கள், கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அழித்த ஜாதிகள் செய்த பொல்லாப்பைப்பார்க்கிலும் அதிகமாய்ச் செய்ய மனாசே அவர்களை ஏவிவிட்டான். ஆகையால் கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு உரைத்தது: யூதாவின் ராஜாவாகிய மனாசே தனக்கு முன்னிருந்த எமோரியர் செய்த எல்லாவற்றைப்பார்க்கிலும் கேடாக இந்த அருவருப்புகளைச் செய்து, தன் நரகலான விக்கிரகங்களால் யூதாவையும் பாவஞ்செய்யப்பண்ணினபடியினால், இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால்: இதோ, கேட்கப்போகிற யாவருடைய இரண்டு காதுகளிலும் அது தொனித்துக்கொண்டிருக்கும்படியான பொல்லாப்பை நான் எருசலேமின்மேலும் யூதாவின்மேலும் வரப்பண்ணி ...''– 2 ராஜா. 21: 1–12

## 8. ஆகாஸ் ராஜா பச்சையான சகல மரங்களின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.

''ஆகாஸ் ராஜாவாகிறபோது இருபது வயதாயிருந்து, பதினாறு வருஷம் எருசலேமில் அரசாண்டான், அவனும் அவன், தன் தகப்பனாகிய தாவீதைப்போல், கர்த்தரின்

பார்வைக்குச் செம்மையானதைச் செய்யாமல், இஸ்ரவேல் ராஜாக்களின் வழிகளில் நடந்து, பாகால்களுக்கு வார்ப்பு விக்கிரகங்களைச் செய்தான். அவன் இன்னோம் குமாரரின் பள்ளத்தாக்கிலே துபங்காட்டி, **கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின ஜாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன் குமாரரை அக்கினியிலே தகித்துப்போட்டு, மேடைகளிலும், மலைகளிலும், பச்சையான சகல மரங்களின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.** ஆகையால் அவனுடைய தேவனாகிய கர்த்தர் அவனைச் சீரியருடைய ராஜாவின் கையில் ஒப்புக்கொடுத்தார், அவர்கள் அவனை முறிய அடித்து, அவனுக்கு இருக்கிறவர்களிலே பெரிய கூட்டத்தைச் சிறைபிடித்துத் தமஸ்குவுக்குக் கொண்டுபோனார்கள், அவன் இஸ்ரவேலுடைய ராஜாவின் கையிலும் ஒப்புக்கொடுக்கப்பட்டான், இவன் அவனை வெகுவாய் முறிய அடித்தான். எப்படியெனில், யூதா மனுஷர் தங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தரைவிட்டபடியினால், ரெமலியாவின் குமாரனாகிய பெக்கா அவர்களில் ஒரேநாளில் லட்சத்திருபதினாயிரம்பேரைக் கொன்றுபோட்டான், அவர்கள் எல்லாரும் மகாவீரராயிருந்தவர்கள்.''– 2 நாளா. 28: 1–6

## 9. அற்புதத்தைக கண்டு மனுஸாகளுக்கு பலியிட முற்பட்டனா்

''லீஸ்திராவிலே ஒருவன் தன் தாயின் வயிற்றிலிருந்து பிறந்ததுமுதல் சப்பாணியாயிருந்து, ஒருபோதும் நடவாமல், கால்கள் வழங்காதவனாய் உட்கார்ந்து, பவுல் பேசுகிறதைக் கேட்டுக்கொண்டிருந்தான். அவனைப் பவுல் உற்றுப்பார்த்து, இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு: நீ எழுந்து காலுன்றி நிமிர்ந்துநில் என்று உரத்த சத்தத்தோடே சொன்னான். உடனே அவன் குதித்தெழுந்து நடந்தான். **பவுல் செய்ததை ஜனங்கள் கண்டு, தேவர்கள் மனுஷரூபமெடுத்து நம்மிடத்தில் இறங்கிவந்திருக்கிறார்கள் என்று லிக்கவோனியா பாஷையிலே சத்தமிட்டுச் சொல்லி, பர்னபாவை யூப்பித்தர் என்றும், பவுல் பிரசங்கத்தை நடத்தினவனானபடியினால் அவனை மெர்க்கூரி என்றும் சொன்னார்கள். அல்லாமலும் பட்டணத்துக்கு முன்னே இருந்த யூப்பித்தருடைய கோவில் பூஜாசாரி எருதுகளையும் பூமாலைகளையும் வாசலண்டையிலே கொண்டு வந்து, ஜனங்களோடேகூட அவர்களுக்குப் பலியிட மனதாயிருந்தான்.** அப்போஸ்தலராகிய பர்னபாவும் பவுலும் அதைக் கேட்டபொழுது, தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, கூட்டத்துக்குள்ளே ஓடி, உரத்த சத்தமாய்: மனுஷரே, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? நாங்களும் உங்களைப்போலப்பாடுள்ள மனுஷர்தானே, நீங்கள் இந்த வீணான தேவர்களைவிட்டு, வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கின ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டுமென்று உங்களுக்குப் பிரசங்கிக்கிறோம். சென்ற காலங்களில் அவர் சகல ஜனங்களையும் தங்கள் தங்கள் வழிகளிலே நடக்கவிட்டிருந்தும், அவர் நன்மை செய்துவந்து, வானத்திலிருந்து மழைகளையும் செழிப்புள்ள காலங்களையும் நமக்குத் தந்து, ஆகாரத்தினாலும் சந்தோஷத்தினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி, இவ்விதமாய் அவர் தம்மைக்குறித்துச் சாட்சி விளங்கப் பண்ணாதிருந்ததில்லை என்றார்கள். இப்படி அவர்கள் சொல்லியும் தங்களுக்கு ஜனங்கள் பலியிடாதபடிக்கு அவர்களை அமர்த்துகிறது அரிதாயிருந்தது.''– அப்போ. 14: 8–18

## 10. ஆதாயத்திற்காக ''தியனாளின்' சிறிய கோவில்களைச் செய்வித்தார்கள்

''பவுல் மக்கெதோனியா அகாயா என்னும் நாடுகளில் சுற்றிநடந்து, எருசலேமுக்குப்போகும்படி ஆவியில் நிருணயம்பண்ணிக்கொண்டு: நான் அங்கே போனபின்பு ரோமாபுரியையும் பார்க்கவேண்டியதென்று சொல்லி, தனக்கு உதவிசெய்தவர்களில் இரண்டுபேராகிய தீமோத்தேயுவையும் ஏரஸ்துவையும்

மக்கெதோனியாவுக்கு அனுப்பிவிட்டு, தான் பின்னுஞ் சிலகாலம் ஆசியாவிலே தங்கினான். அக்காலத்திலே இந்த மார்கத்தைக் குறித்துப் பெரிய கலகம் உண்டாயிற்று. எப்படியென்றால், **தெமேத்திரியு என்னும் பேர்கொண்ட ஒரு தட்டான் தியானாளின் கோவிலைப்போல் வெள்ளியினால் சிறிய கோவில்களைச் செய்து, தொளிலாளிகளுக்கு மிகுந்த ஆதாயம் வருவித்துக்கொண்டிருந்தான்**. இவர்களையும் இப்படிப்பட்ட தொழில்செய்கிற மற்ற வேலையாட்களையும் அவன் கூடிவரச்செய்து: மனுஷர்களே, இந்தத் தொழிலினால் நமக்கு நல்ல பிழைப்பு உண்டாயிருக்கிறதென்று அறிவீர்கள். **இப்படியிருக்க, கைகளினால் செய்யப்பட்ட தேவர்கள் தேவர்களல்லவென்று இந்தப் பவுல் என்பவன் சொல்லி, எபேசுவிலேமாத்திரமல்ல, கொஞ்சங்குறைய ஆசியா எங்கும் அநேக ஜனங்களுக்குப் போதித்து, அவர்களை வசப்படுத்திக்கொண்டான் என்று நீங்கள் கண்டும் கேட்டும் இருக்கிறீர்கள்.** இதனால் நம்முடைய தொழில் அற்றுப்போகும்படியான அபாயம் நேரிட்டிருக்கிறதுமல்லாமல், மகா தேவியாகிய தியானாளுடைய கோவில் எண்ணமற்றுப் போகிறதற்கும், ஆசியா முழுமையும் பூச்சக்கரமும் சேவிக்கிற அவளுடைய மகத்துவம் அழிந்துபோகிறதற்கும் ஏதுவாயிருக்கிறது என்றான். அவர்கள் இதைக் கேட்டு, கோபத்தால் நிறைந்து: எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று சத்தமிட்டார்கள். பட்டணம் முழுவதும் கலகத்தினால் நிறைந்தது. பவுலுக்கு வழித்துணையாய்வந்த மக்கெதோனியராகிய காயுவையும் அரிஸ்தர்க்குவையும் அவர்கள் இழுத்துக்கொண்டு, ஒருமனப்பட்டு அரங்கசாலைக்குப் பாய்ந்தோடினார்கள். பவுல் கூட்டத்துக்குள்ளே போகமனதாயிருந்தபோது, சீஷர்கள் அவனைப்போகவிடவில்லை. ஆசியாநாட்டுத் தலைவரில் அவனுக்குச் சிநேகிதராயிருந்த சிலரும் அவனிடத்திற்கு ஆள் அனுப்பி, அரங்கசாலைக்குள் போகவேண்டாம் என்று எச்சரித்தார்கள். கூட்டத்தில் அமளியுண்டாகி, சிலர் இப்படியும் சிலர் அப்படியுமாகப் பேசினார்கள், தாங்கள் கூடிவந்த காரணம் இன்னதென்று அநேகருக்குத் தெரியாதிருந்தது. அப்பொழுது யூதர்கள் அலெக்சந்தர் என்பவனை முன்னிற்கத் தள்ளுகையில், கூட்டத்திலே சிலர் அவனை முன்னே இழுத்துவிட்டார்கள். அலெக்சந்தர் கையமாத்தி, ஜனங்களுக்கு உத்தரவு சொல்லமனதாயிருந்தான். அவன் யூதனென்று அவர்கள் அறிந்தபோது, எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று இரண்டுமணி நேரமளவும் எல்லாரும் ஏகமாய்ச் சத்தமிட்டுக்கொண்டிருந்தார்கள். பட்டணத்துச் சம்பிரதியானவன் ஜனங்களை அமர்த்தி: எபேசியரே, எபேசியருடைய பட்டணம் மகா தேவியாகிய தியானாளுக்கும் வானத்திலிருந்து விழுந்த சிலைக்கும் கோவிற்பரிசாரகியாயிருக்கிறதை அறியாதவன் உண்டோ? இது எதிர்பேசப்படாத காரியமாகையால், நீங்கள் ஒன்றும் பதறிச்செய்யாமல் அமர்ந்திருக்கவேண்டும். இந்த மனுஷரை இங்கே கொண்டுவந்தீர்கள், இவர்கள் கோவிற்கொள்ளைக்காரருமல்ல, உங்கள் தேவியைத் துஷிக்கிறவர்களுமல்ல. தெமேத்திரியுக்கும் அவனைச் சேர்ந்த தொழிலாளிகளுக்கும் ஒருவன்மேல் ஒருகாரியம் உண்டாயிருந்தால், நியாயம் விசாரிக்கிற நாட்களுண்டு, தேசாதிபதிகளும் இருக்கிறார்கள், ஒருவர்பேரிலொருவர் வழக்காடிக்கொள்ளட்டும். நீங்கள் வேறெ யாதொரு காரியத்தைக்குறித்து விசாரிக்கவேண்டியதானால், அது நியாயசங்கத்திலே தீர்க்கப்படும். இன்றைக்கு உண்டான கலகத்தைக்குறித்து நான் உத்தரவுசொல்லுகிறதற்கு ஏதுவில்லாதபடியால், இந்தக் கலகத்தைக்குறித்து நாங்கள் விசாரிக்கப்படும்போது, குற்றவாளிகளாகிறதற்கு ஏதுவாயிருப்போமே என்று சொல்லி, பின்பு கூட்டத்தை அனுப்பிவிட்டான்."– அப்போ. 19: 21–41

## கர்த்தரை விட்டு விலகிய ஜனம்

கர்த்தரால் தெரிந்துகொள்ளப்பட்ட, அழைக்கப்பட்டு ஆசீர்வதிக்கப்பட்ட ஜனம் பலவிதமான சந்தற்ப சூழ்நிலையில், ராஜா முதல் சாதாரண மனிதன்வரை கர்த்தரை விட்டு விலகி அந்நியதேவர்களைப் பின்பற்றி வெட்டப்பட்ட சுரூபங்களையும், சிலைகளையும், வானசேனைகளையும், வார்ப்பிக்கப்பட்ட விக்கிரகங்களையும் வணங்கியதோடு, சிலர்

மனுஷரையும் மகான்களென்றும், தெய்வப் பிறவிகளென்றும் அவர்களை வணங்குவதும், சிலர் மரித்துப்போனவர்களிடம் ஜெபம் ஏறெடுப்பதையும், மேலும் பச்சையான மரங்களின் கீழ் பலி பீடங்களை உண்டுபண்ணி பாகாலுக்குப் பலிகளைச் செலுத்தி, குறி சொல்பவர்களை நாடிக் குறிபார்த்து, அஞ்ஞனம் பார்த்து, நாள் பார்த்து, தமது குமாரர் குமாரத்திகளைத் தீக்கடக்கப்பண்ணி, இப்படியாகத் தங்கள் சுய சிந்தனையிலே பற்பல தங்கள் தேவைகளுக்காக மெய் தேவனாகிய கர்த்தரை விட்டுத் தூரமானார்கள். இப்படி அந்நிய தேவர்களை நாடித் தேடிப் போனவர்கள் ஏனைய மனுஷரைத் திருப்திப்படுத்தவும், பணத்திற்காகவும், வியாபார நோக்கோடு சிறிய ஆதாயத்திற்காகவும், பெண்களுக்காகவும், தேசங்களை ஆளுகை செய்வதற்காகவும், பதவிக்காகவும், பட்டத்திற்காகவும், தங்களைப் பெருமைப்படுத்திக் காண்பிக்கவும் இவைகளைச் செய்தார்களே தவிர, கர்த்தராகிய தேவன் தெய்வமல்ல என்பதற்காச் செய்யவில்லை என்பதை மேலே கொடுக்கப்பட்ட சம்பவங்களிலிருந்து அறியக்கூடியதாய் இருக்கிறது. இந்த நிலமை உலகில், இந்த நாட்களில் மிகவும் அதிகரித்து நடைபெறுவதை எங்கும் காணக்கூடியதாய் இருக்கிறது. எவ்வளவு பரிதாபத்திற்குரிய நிலை!

## கர்த்தருக்காய் வைராக்கியமாய் வாழ்ந்தவர்கள்

மெய் தேவனை மறுதலித்தவர்கள் ஒருபுறம் இருக்க, கர்த்தருக்கென்று அவருடைய நாமத்தை மகிமைப்படுத்த, கர்த்தர் நல்லவர் அவர் கிருபை என்றுமுள்ளது என்பதை வெளிப்படுத்தி நிரூபிக்கத்தக்கதாக செயற்பட்டவர்களுடைய சில நிகழ்வுகளையும் பரிசுத்த வேதாகமத்திலிருந்து பார்த்து நாமும் கர்த்தருக்குள் களிகூருவோம்.

### 1) ஆசா ராஜா தன் தாயின் விக்கிரகங்களையே அகற்றினான்

"அபியாம் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின், அவனைத் தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணினார்கள், அவன் குமாரனாகிய ஆசா அவன் ஸ்தானத்தில் ராஜாவானான். இஸ்ரவேலின் ராஜாவாகிய யெரொபெயாமின் இருபதாம் வருஷத்திலே ஆசா யூதாவின்மேல் ராஜாவாகி, நாற்பத்தொரு வருஷம் எருசலேமில் ராஜ்யபாரம்பண்ணினான், அப்சலோமின் குமாரத்தியாகிய அவனுடைய தாயின் பேர் மாகாள். **ஆசா தன் தகப்பனாகிய தாவீதைப்போல் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். அவன் இலட்சையான புணர்ச்சிக்காரரை தேசத்திலிருந்து அகற்றி, தன் பிதாக்கள் உண்டுபண்ணின நரகலான விக்கிரகங்களையெல்லாம் விலக்கி, தோப்பிலே அருவருப்பான விக்கிரகத்தை உண்டுபண்ணின தன் தாயாகிய மாகாளையும் ராஜாத்தியாய் இராதபடிக்கு விலக்கிவிட்டான், அவளுடைய விக்கிரகத்தையும் ஆசா நிர்மூலமாக்கி, கீதரோன் ஆற்றண்டையிலே சுட்டெரித்துப்போட்டான்.** மேடைகளோ தகர்க்கப்படவில்லை, ஆனாலும் ஆசா உயிரோடிருந்த நாளெல்லாம் அவன் இருதயம் கர்த்தரோடே உத்தமமாயிருந்தது. தன் தகப்பனும் தானும் பரிசுத்தப்படுத்தும்படி நேர்ந்துகொண்ட வெள்ளியையும் பொன்னையும் பணிமுட்டுகளையும் அவன் கர்த்தருடைய ஆலயத்திலே கொண்டுவந்தான்."– 1 ராஜா 15: 8–15

### 2) யோசபாத் ராஜா விக்கிரகங்களை அகற்றி வேதத்தை போதித்தான்

"கர்த்தர் யோசபாத்தோடிருந்தார், அவன் பாகால்களைத் தேடாமல், தன் தகப்பனாகிய தாவீது முன்நாட்களில் நடந்த வழிகளில் நடந்து, தன் தகப்பனுடைய தேவனைத் தேடி, இஸ்ரவேலுடைய செய்கையின்படி நடவாமல், அவருடைய கற்பனைகளின்படி

